REGD. No: TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone 812818 4 பக்கம் விலை 35 காசு



## லட்சியம்

சமதர்மம் என்ற உயர்ந்த லட்சியத்தின் படி சமூகம் திருத்தி அமைக்கப்பட வேண்டும்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

## நல்லவர்

நல்லவரின் எண்ணங்கள் ஒருபோதும் வீணாவதில்லை.

-அண்ணல் காந்தி



மலர்: 4 சென்னை 6-6-1980 வெள்ளி (★) ❋ ● ❋ (✶) வெளியீடு 7—6—1980 சனி இதழ் 208

## அண்ணாவின் அரசு புரட்சித்தலைவர் தலைமையில் பதவியேற்கும் நாள் ஜூன் 9: தோரணங்கள் கட்டி

# சென்னை நகர் விழாக்கோலம் பூணட்டும்



## டாக்டர் நாவலர் வேண்டுகோள்

சென்னை, ஜூன் 6- மூன்றரைத் திங்களாக வீழ்ச்சியுற்று இருளில் மறைந்துகிடந்த தமிழகத்தை மீட்டு, மீண்டும் அண்ணாவின் ஆட்சியை அமைக்கும் பெருமை புரட்சித்தலைவரைச் சாருகிறது. அண்ணாவின் அரசு 9-ந் தேதி பதவி ஏற்பதைத் தொடர்ந்து கொடி தோரணங்களால் சென்னை நகரம் விழாக்கோலம் பூணட்டும் என்று பொதுச்செயலாளர் டாக்டர் நாவலர் கேட்டுக்கொண்டுள்ளார்.

, வீழ்ச்சியுற்றுக் கிடந்த மதுரையை மீட்டு மீண்டும் பாண்டியர் ஆட்சியை நிறுவிய பெருமை மதுரையை மீட்ட சுந்தரபாண்டியனைச் சாரும். அதுபோல சென்ற மூன்றரைத் திங்கள்களாக வீழ்ச்சியுற்று, இருளில் மறைந்து கிடந்த தமிழகத்தை மீட்டு, மீண்டும் அண்ணாவின் ஆட்சியை அமைக்கும் பெருமை புரட்சித் தலைவரைச் சாருகிறது.

புரட்சித்தலைவர் அவர்கள் தமிழக ஆட்சிப் பொறுப்பை ஏற்கும் பதவி ஏற்பு விழா 9-6-80 அன்று பகல் 12 மணி அளவில் கலைவாணர் அரங்கில் நடைபெறும் என்றும் புரட்சித் தலைவர் அவர்களும், அவரால் நியமிக்கப்படும் அமைச்சர்களும் பதவியேற்றபின் புரட்சித் தலைவர் அவர்கள் அறிஞர் அண்ணா அவர்களின் சிலைக்கு மாலை அணிவித்துப் பொதுமக்களுக்குப் பேருரை நிகழ்த்துவார்என்றும் அறிவிக்கப்பட்டுள்ளன

9-6-80 அன்று மாலை 6 மணி அளவில் சென்னை கடற்கரை சீரணி அரங்கில் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்தின் சார்பாக நடைபெறும் தமிழக மக்களுக்கு நன்றியறிவிப்புப் பொதுக்கூட்டத்தில் புரட்சித்தலைவர் அவர்களும், சனநாயகப் பாதுகாப்புக் கூட்டணிக் கட்சிகளின் தலைவர்களும் கலந்து கொண்டு சிறப்புரை ஆற்றுவர்.

சென்னை மாநரிலுள்ள கழகத் தோழர்களும்-மன்றங்களைச் சார்ந்த நண்பர்களும்-கழக ஆதரவாளர்களும் - தோழமைக்கட்சியினரும் 9-6-80 திங்களன்று சென்னை நகரம் முழுவதும் விழாக்கோலம் பூணத்தக்க அளவுக்குக் கொடித் தோரணங்கள் கட்டியும், கொடியேற்றங்கள் செய்தும், ஏழை எளியவர்க்கு இனிப்புக்கள் வழங்கியும் பெருவிழாவாகக் கொண்டாடுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

இரா. நெடுஞ்செழியன்
பொதுச்செயலாளர்

சென்னை
6 6-80



கண்ணியத்துக்குரிய காயிதே மில்லத் சமாதியில் புரட்சித் தலைவர் பூப் போர்வை சார்த்தியபோது எடுத்த படம்.

## கழகத்தில் செம்மலை



சென்னை, ஜூன்-6 சுயேச்சையாகப் போட்டியிட்டு தாரமங்கலத்தில் வெற்றி பெற்ற செ செம்மலை கழகத்தில் சேர்ந்துள்ளதால் கழகத்தின் பலம் சட்டப் பேரவையில் 130 ஆக உயர்ந்துள்ளது.

புரட்சித்தலைவரையும் பொதுச்செயலாளர் டாக்டர் நாவலரையும்சந்தித்து தம்மைப் பொறுத்தருளி

(2-ம் பக்கம் பார்க்க)

## சர்க்காரியா வழக்கு: டெல்லியில் கருணாநிதி சரணாகதி

### மேயர் மதுரைமுத்து அறிக்கை

மதுரை, ஜூன் 6-சர்க்காரியா வழக்குகளுக்காக டெல்லியில் கருணாநிதி சரணாகதி அடைந்துள்ளார் என மேயர் மதுரைமுத்து தெரிவித்துள்ளார். தமிழகத்தின் தனித்தன்மையைக்காப்பாற்ற தி.மு.கவினர் புரட்சித் தலைவரின் அணிக்குவரவேண்டும் என்றும் அவர் மேலும் தெரிவித்துள்ளார்.

மதுரை மேயர் முத்து அறிக்கையொன்றில் தெரிவித்திருப்பதாவது:

60 ஆண்டுக் காலமாக தந்தைபெரியாரும், பேரறிஞர் அண்ணாவும், டெல்லி ஏகாதிபத்தியத்தை எதிர்த்து தமிழ்நாட்டின் தனித் தன்மைக்காக பாடுபட்டு வந்தார்கள்.

அண்மைக் காலமாக, கருணாநிதியின் நடவடிக்கைகள் தமிழ்நாட்டின் தனித்தன்மையை பாழ்படுத்தி வருகின்றன.

தேர்தல்முடிவுக்குபிறகும் தன் மீது போடப்பட்டுள்ள சர்க்காரியா கமிஷன் வழக்குகளில் இருந்து தப்புவதற்காக, டெல்லியில் கருணாநிதி சரணாகதியடைகிறார்,

### சி.பி.ஐ. தீவிரம்

சர்க்காரியா கமிஷன் அடிப்படையில் போடப்பட்டுள்ள வழக்குகளுக்

(2-ம் பக்கம் பார்க்க)



## ஜூன் 9

## அண்ணாவின் அரசு அமையும் பொன்னாள்!
## அழைப்பு விடுத்துள்ளார் நம் அருந்தலைவர்!
## கழகத்தோழனே-அணிதிரண்டுவா!



## ஆயிரம்விளக்குத் தொகுதி

## கழகத்தினர் இனிப்பு வழங்கினர்

சென்னை, ஜுன் 6. ஆயிரம்விளக்குத் தொகுதி 124வது வட்டத்தின் வாக்காளப் பெருமக்களுக்கு நன்றி தெரிவிக்கும் வகையில் ஜி.எம். சலீம், பகுதி அமைப்பாளர் பி. அங்கமுத்து தலைமையில் வட்ட அமைப்பாளர் காசிம் முன்னிலையில் 3 ஆயிரத்துக்கும் மேற்பட்டவர்களுக்கு லட்டு வழங்கப்பட்டது.

## குத்துச் சண்டை வீரர்களுக்கு...

சென்னை, ஜுன் 6- பணம் பெற்றுக்கொண்டு குத்துச்சண்டை செய்பவர்கள் சென்னையிலுள்ள இந்தியன் பாக்சிங் கமிஷன் மூகவரிக்கு வந்து தங்களது பெயர்களை பதிவுசெய்து கொள்ளும்படி கேட்டுக்கொண்டுள்ளது. சங்கம் ஞாயிறு காலை 9 மணிக்கு திறந்திருக்கும் என்று அறிவித்துள்ளது.

முகவரி: இந்தியன் பாக்சிங் கமிஷன், எண் 16 அல்லது 32, வாலர்ஸ் சாலை, அண்ணாசாலை, சென்னை-2

## நாகாலாந்து மந்திரிசபை ராஜினாமா

கோகிமா, ஜுன் 6. நாகாலாந்து மாநில முதல் அமைச்சர் எஸ். சி. ஜமீர் தலைமையிலான மந்திரி சபை ராஜினாமா செய்தது. முதலமைச்சர் ஜமீர் நேற்று காலை தனது மந்திரிசபையின் ராஜினாமாவை கவர்னர் எஸ்.பி.சிங்கிடம் சமர்ப்பித்தார்.

ஜமீர் பதவியேற்று 49 நாட்களே ஆகிறது. நாகர் தேசிய ஜனநாயக கட்சித்தலைமையில் புதிய கூட்டணி அரசு ஜசோகி தலைமையில் பதவி ஏறக்கூடும் எனத்தெரிகிறது.

## மறைவு

சென்னை 17 வது வட்ட கழகச் செயல்வீரர் இ. கோபாலகிருஷ்ணன் நேற்று இரவு 8 30 மணிக்கு திடீர் என மரணமடைந்தார். இன்று மாலை 5 மணிக்கு மூலக்கொத்தளம் இடுகாட்டில் இறுதிச் சடங்கு நடைபெறுகிறது.

ஃ

மயிலை நொச்சிக்குப்பம் கழக செயல்வீரர் ஆர். சரவணனின் தாயார் நேற்று இரவு மரணமடைந்தார். இன்று மாலை 4 மணிக்கு மயிலாப்பூர் இடுகாட்டில் அடக்கம் நடைபெறுகிறது.

### மீண்டும் மாபெரும் வெற்றிபெற்றபின் முதல் நிகழ்ச்சியாக

# காயிதேமில்லத் விழாவில் புரட்சித்தலைவர் பங்கேற்பு

## புரட்சித்தலைவர் பதவி ஏற்பு: கழக விழா

புரட்சித்தலைவர் முதல்வராக பதவி ஏற்பதை யொட்டி 'பட்டுல்லாசாலை பணிமனை அனைத்துத் தொழிலாளர் சார்பில விழா 9 6 80 திங்கள் காலை 7 மணிக்கு சென்னை பட்டுல்லா சாலை பல்லவன் போக்குவரத்து பணிமனையில் எஸ் இராசு தலைமையில் தொழிற்சங்கப்பிரிவுச் செயலாளர் வை. பெருமாள் இனிப்பு வழங்குகிறார்.

கே. பி. தூயமணி கே ராஜேந்திரன் ஏ. நடராசன், பி. வடிவேலு, ஏ. இராஜேந்திரன், அன்சர் பி. சம்பங்கிராவ், எஸ். சுந்தர் கணேஷ். தாஸ்நாகராசன் டி தனசேகரன் சங்கரன் ஜி மோகன் எஸ் சிங்காரவேலு ஆகியோர் பேசுவார்கள்.

## வளர்மதி நன்றி அறிவிப்பு

சென்னை, ஜுன் 6. நடைபெற்ற சட்டமன்ற தேர்தலில் கழகம் பெருவாரியான வெற்றியைப் பெற புரட்சித்தலைவரை முதல்வராக அமரச்செய்ய அரும்பாடுபட்ட கழகத் தோழர்களுக்கும், தொழிலாளர், மாணவர், மகளிர் பிரிவினருக்கும் உறுதுணையாக நின்ற தோழமைக் கட்சியினருக்கும் கழக மகளிர் பிரிவு செயலாளர் பா வளர்மதி நன்றி தெரிவித்துள்ளார்

## நெடுமாறனை வரவேற்க ஏற்பாடு

சென்னை, ஜுன் 6. தமிழ்நாடு காமராஜ் காங்கிரஸ் கட்சி தலைவர் நெடுமாறன் நாளை 7-ந்தேதி இரவு மதுரையிலிருந்து பாண்டியன் எக்ஸ்பிரஸ் ரயில்மூலம் புறப்பட்டு 8ந் தேதி காலை சென்னை எழும்பூர் வந்து சேருகிறார். அவரை வரவேற்க தமிழ்நாடு காமராஜ் காங்கிரஸ்கட்சி சென்னை தலைவர்கிள்ளிவளவன் ஏற்பாடுகள் செய்துள்ளார்.

சென்னை, ஜுன் 6 மீண்டும் மாபெரும்வெற்றி பெற்றபின் தமது முதல் நிகழ்ச்சியாக - கண்ணியத்துக்குரிய காயிதேமில்லத் அவர்களின்கல்லறைக்குப் பூப்போர்வைசார்த்தி அவரது பிறந்தநாள் விழாவில் பேசினார் புரட்சித்தலைவர்.

திருவல்லிக்கேணி வாலாஜாப்பள்ளிவாசலில் அடக்கம் செய்யப்பட்ட காயிதேமில்லத் கல்லறைக்கு புரட்சித்தலைவர் வந்தார்.

கல்லறையில் மலர்வளையமும் பூப்போர்வையும் சார்த்தினார். அதன்பிறகு நடந்த பொதுக்கூட்டத்தில் புரட்சித்தலைவர் சிறப்புரையாற்றினார். கூட்டத்திற்கு செங்கம் ஜப்பார் தலைமை வகித்தார்.

முன்னாள் அமைச்சர் ராஜாமுகமது, தலைமை நிலையச் செயலாளர் அப்துல் காதர். தொகுதி அமைப்பாளர் ராஜ்குமார் திருவல்லிக்கேணி தொகுதி அமைப்பாளர் ஜெ.பாலன் மற்றும் கழகத் தோழர்களும், இளைஞர் முஸ்லிம் லீகினரும் கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

கூட்டத்தில் புரட்சித்தலைவர் ஆற்றிய உரை வருமாறு:-

காயிதேமில்லத் அவர்களை காலா காலத்திற்கும் சரித்திரம் உள்ள வரைக்கும் இந்திய பெருமக்கள் மறக்க மாட்டார்கள்.

காயிதேமில்லத் பற்றி அறிஞர் அண்ணா ஒருமுறை அழகாகச் சொன்னார்,

காயிதேமில்லத் கையிலே இல்லாதவர்; உள்ளத்திலே மாசு இல்லாதவர் என்று.

அப்படி அப்பழுக்கற்ற வாழ்க்கை வாழ்ந்து இந்து இஸ்லாமிய மக்களுக்காக போராடிய பெருந்தலைவர் தான் காயிதே மில்லத் அவர்கள்.

அதுமட்டுமின்றி இந்து-முஸ்லிம் ஒற்றுமைக்காகவும் ஜனநாயகநெறி முறைகளை பாதுகாப்பதற்காகவும் அறப்போர் நடத்தியவர் காயிதேமில்லத் அவர்கள்.

அறிஞர் அண்ணா சொன்னது போல ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்று வாழக்கூடிய இஸ்லாமிய பெருமக்கள் காயிதே மில்லத் பிறந்த நாள் விழாவில் ஜனநாயகத்தை காப்பதற்காக உறுதிபூண வேண்டும்.

இங்கு இருக்கின்ற பல மதத்தைச் சார்ந்த சகோதரர்களுக்கும் ஒன்றைச் சொல்லிக்கொள்வேன்.

எல்லா மதத்திலும் சிறந்த கொள்கைகள், தத்துவங்கள் உண்டு.

அதேபோன்று இஸ்லாமியமதத்திலும் தலைசிறந்த அறநெறிகள் இருக்கின்றன அதை அனைவரும் படிக்க வேண்டும். புரிந்துகொண்டு பின்பற்றி வாழவேண்டும். காயிதே மில்லத் வாழ்ந்து காட்டிய அறநெறி வழியில் செல்ல வேண்டும். நாட்டுக்கும் - நாட்டு மக்களுக்கும் தொண்டாற்ற வேண்டும்.

இவ்வாறு காயிதே மில்லத் பிறந்தநாள் விழாவில் புரட்சித்தலைவர் அவர்கள் உரையாற்றினார்.

## தாரமங்கலம் எம். எல். ஏ. செ. செம்மலை மீண்டும் கழகத்தில் சேர்ந்தார்

தாரமங்கலம் தொகுதியில் சுயேச்சையாக போட்டியிட்டு வெற்றிபெற்ற திரு செ.செம்மலை, 5 6 80 அன்று புரட்சிதலைவர் அவர்களையும், பொதுச்செயலாளர் டாக்டர் நாவலர் அவர்களையும் கண்டு தம்மைப் பொறுத்தருளி மீண்டும் கழகத்தில் சேர்ந்து பணியாற்ற வேண்டினார். புரட்சித்தலைவர் அவர்களும், பொதுச்செயலாளர் அவர்களும் அவரை மன்னித்தருளி கழகத்தில் சேர்ந்து முனபுபோல் பணியாற்ற அனுமதியளித்தனர்.

திரு. செம்மலை அவர்களையும் சேர்த்துத் தமிழகச் சட்டமன்றத்தில் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக உறுப்பினர்களின் எண்ணிக்கை 130 ஆக ஆகிறது.

## மதுரை முத்து அறிக்கை

(முதல் பக்கத் தொடர்ச்சி)

காக கருணாநிதியை கைது செய்ய மத்திய புலனாய்வுத் துறையினர் தீவிரம் காட்டுவதாகக் கூறப்படுகிறது.

இந்த நிலையை தி.மு.க. நண்பர்கள் சிந்தித்து செயல்பட வேண்டுகிறேன்

இனிமேலாவது கருணாநிதியின் தலைமையைத் தூக்கி எறிந்துவிட்டு தமிழ்நாட்டின் தனித்தன்மையைக் காக்க தமிழ்நாடு வளம்பெற புரட்சித்தலைவர் தலைமையின் கீழ் அணிவகுக்கஅன்புடன் வேண்டுகிறேன்.

இவ்வாறு மேயர்மதுரை முத்து தெரிவித்துள்ளார்.

## கழகத்தில் செம்மலை

(முதல் பக்கத் தொடர்ச்சி)

மீண்டும் கழகத்தில் சேர்ந்து பணியாற்ற விரும்பியதால் அவரை முன்புபோல் பணியாற்ற அனுமதி யளித்துள்ளனர்.

தாரமங்கலம் செ. செம்மலையையும் சேர்த்து தமிழகசட்டப்பேரவையில் கழகத்தின் பலம் 130 ஆக உயர்ந்துள்ளது.



புரட்சித்தலைவருக்கு

## கடை நிறுவன அண்ணா தொழிலாளர் சங்கம் பாராட்டு

சென்னை, ஜுன். 6. கடை நிறுவன அண்ணா தொழிலாளர் சங்க செயலாளர் எஸ்.ஆர். சுப்பிரமணியம் விடுத்துள்ள அறிக்கையில் தெரிவித்திருப்பதாவது:-

கடை நிறுவன அண்ணா தொழிலாளர்கள் சங்கத்தின் சார்பில் விடுக்கப்பட்ட வேண்டுகோளுக்கிணங்க நடந்து முடிந்த சட்டமன்ற தேர்தலில் கழக வேட்பாளர்களுக்குவாக்களித்த தொழிலாளர்களுக்கும், சங்கத்தைச் சேர்ந்தவர்கள் பல்வேறு தொகுதிகளில் கழக வேட்பாளர்களுக்கு ஆதரவாக தேர்தல் பணியாற்றியமைக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

கடைகளில் வேலை செய்யும் தொழிலாளர்கள் தங்களுக்கு ஏற்படும் பிரச்சினைகளுக்கு சங்கத்தை அணுகுமாறும் கேட்டுக் கொள்ளுகிறேன்.

இவ்வாறு எஸ். ஆர். சுப்பிரமணியம் தெரிவித்துள்ளார்.

## காயிதேமில்லத் பிறந்த நாள் கொடியேற்று விழா

சென்னை. ஜுன் 6. காயிதே மில்லத் பிறந்த தின விழாவை யொட்டி மாநில இளைஞர் முஸ்லிம் லீக் தலைமை நிலையத்தில் கொடியேற்று விழா நடைபெற்றது.

தலைமைநிலையப்பொறுப்பாளர் ஏ. எம். குலாம் உசேன் தலைமையில் சம்சுதீன் முன்னிலையில்பச்சிளம் பிறை கொடியை வாவூநாசர் ஏற்றி வைத்து பேசினார்.

விழாவில் ஜலாலுதீன், முகம்மது, புகாரி, முகம்மது யாசின், இஸ்மாயில், நிஜாம், இஸ்மத் இனுன்முபாரக் ஆகியோர் பேசினர்.

### ஊழல் முகாம் கருணாநிதி கட்சியால் நாட்டுக்கு நன்மை இல்லை! தீமையே!

# 1100 தி. மு. க. வினர் கழகத்தில் இணைந்தனர்

### புரட்சித்தலைவருக்கு மாலை அணிவித்து பாராட்டு

சென்னை, ஜுன் 6. தி.மு.க. பொதுக்குழுஉறுப்பினர் தம்பிதுரை, மற்றும் ஊராட்சி ஒன்றியத் தலைவர்கள் உட்பட 1100 பேர் தி.மு.க.விலிருந்து விலகி இன்று புரட்சித் தலைவர் முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

தமிழகத்தில் நடந்து முடிந்த சட்டசபை தேர்தலில் திமுக படுதோல்வி அடைந்தது. இதை யொட்டி கருணாநிதி தன் பதவியை ராஜினாமா செய்யவேண்டும் என்று கோரி அவர்கட்சித்தலைவர்களும், தொண்டர்களும் தெரிவித்தனர்.

ஆனால் கருணாநிதியோ கட்சித் தலைவர் பதவியை கெட்டியாகப் பிடித்துக்கொண்டு நான் ராஜினாமா செய்ய மாட்டேன் என்று கூறி வருகிறார்.

இதனால் திமுக வினர் கொதிப்படைந்துள்ளனர். மேலும் கருணாநிதியின் தலைமையை விரும்பாமல் அக்கட்சியிலிருந்து விலகி வருகின்றனர். தேர்தல் முடிவு தெரிந்ததிலிருந்து தொடர்ந்து சாரிசாரியாக தி. மு. க. வினர் அக் கட்சிக்கு முழுக்கு போட்டுவிட்டு கழகத்தில் இணைந்தவாறு இருக்கின்றனர். இப்போது அக்கட்சியிலிருந்து முன்னாள் பெருந்தலைவர்களும பொதுக்குழு உறுப்பினர்களும் கழகத்தில் இணைந்துள்ளனர். மதுரை ஆத்தூர் தொகுதி ரெட்டியார் சத்திரம் முன்னாள் ஊராட்சி ஒன்றிய பெருந்தலைவரும், திமுக பொதுக்குழு உறுப்பினருமான கே. தம்பிதுரை, குஜிலியம் பாறை (பாளையம்) ஊராட்சி ஒன்றிய முன்னாள் பெருந்தலைவர் ஆர் தனுஷ்கோடி புதுக்கோட்டை ஊராட்சி மன்ற முன்னாள் தலைவர் பா. கிருஷ்ணன், ரெட்டியார் சத்திரம் ஒன்றிய திமுக துணை செயலாளர் இரா. பரமன் மற்றும் 1100 பேர் அக் கட்சியிலிருந்து விலகி புரட்சித் தலைவர் முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர். இவர்கள் புரட்சித்தலைவருக்கு மாலை அணிவித்து உங்கள் தலைமையில் நாங்கள் என்றும் நடப்போம் என்று உறுதி அளித்தனர். அப்போது அவர்களுடன் காளிமுத்து, அன்பழகன், பாலகுரு, பி எஸ் மணியம், பட்டுராஜன், தொகுதி எம் எல் ஏ வெள்ளைச்சாமி ஆகியோர் உடன்இருந்தனர்

# மக்கள் சக்திக்குக் கிடைத்த மகத்தான வெற்றி

"நம்மிடையேஉள்ள எவரையும் போலத் தான் அவர் இருக்கிறார். எனினும் நம்மை விட ஓராயிரம் மடங்கு தொலைநோக்குடையவராக இருக்கிறார்."

புரட்சியின்போது மாவீரன் லெனினின் நடவடிக்கைகளையும செயல் முறைகளையும் கூர்ந்து கவனித்த எழுத்தாளர் ஒருவர் இப்படிக் குறிப்பிட்டாராம்.

அந்த சொற்களைத்தான் இந்தியநாட்டு மக்கள் இன்று புரட்சிததலைவரை எண்ணி உச்சரித்துக் கொண்டு இருக்கிறார்கள்.

தமிழக சட்டமன்றத் தேர்தலின் முடிவு எப்படி அமையும் என்பது பற்றிய புரட்சித்தலைவரின் கணிப்பு, நாட்டு மக்கள் வழங்கியதீர்ப்பு, ஆகியவை அவரது தொலைநோக்கினை குறிதது நாட்டு மக்கள் கொண்டுள்ள நம்பிக்கையினை உறுதி செய்வதாக அமைந்திருக்கிறது.

நாடாளுமன்றத் தேர்தல் முடிவு-நடந்துமுடிந்த சட்டமன்றத்தேர்தலிலும் திரும்பவரும் என்று நம்பியவர்கள் நிலைகுலைந்து போயிருக்கிறார்கள். நாட்டு மக்கள் வழங்கிய தோல்வியைத்தாங்கிக் கொள்ள வலிமை இல்லாத காரணத்தினால் கொள்கைகளையும் கோட்பாடுகளையும் குழி தோண்டி புதைத்து விட்டு, கல்லறை எழுப்பி, அதன் மீது நின்று அமைத்துக்கொண்ட "லட்சிய உறவு" வெற்றி புரிந்து அழைத்துச் செல்லும் என்று எதிர்பார்த்தார் கருணாநிதி.

அதனால்தான் தேர்தல் நடக்குமுன்னே தன்னை முதல்வராக அறிவிக்க வேண்டுமென்று டில்லிக்கு வேண்டுகோள் விடுத்தார் கோபாலபுரத்தார்.

தனது தனி வாழ்வைக் காப்பாற்றிக் கொள்ள எந்த நிலையும் எடுப்பார்; யாருக்கும் அடிமையாக இருப்பார் அந்த நபர் என்பதை அவர்கள் அறிவார்கள். 'ஆட்சி அமைந்தால் அவர் தான் முதல்வர்' என்று அவர்களும் உறுதி தந்தார்கள்.

அதை நம்பி, நாட்டு மக்களின் நாடித்துடிப்பினை அறிந்திடாத சில அரசியல் வாதிகள், இடம் விட்டு இடம் தாவினார்கள்.

மாமரத்திலே இருக்கும் போதே புளியம்பழத்தை பற்றி சிந்திக்கும் வவ்வால் மனப்பான்மை கொண்ட மனிதர்கள் கருணாநிதியின் சாக்கடை அரசியலில் சங்கமம் ஆனார்கள்.

நாட்டு நடப்பும் ஏட்டில் வந்த செய்திகளும் சிலரை மயக்கத்தில் ஆழ்த்தி தடம் மாற வைத்தது. ஆனால் புரட்சித்தலைவர் அவர்கள் நம்மை நாட்டு மக்கள் மீண்டும் ஆட்சியில் அமரச்செய்வார்கள் அறுதிப்பெரும்பான்மை பெறுகின்ற வகையில் கழகத்திற்கு வெற்றியைத் தருவார்கள் என்று அறிவித்தார்.

"He knew the abb and flow of the Popular feeling.... He was feeling their feeling thinking their thoughts and voicing their desires'

'மக்களின் உள்ளத்தையும், அங்கு ஊற்றெடுக்கும் உணர்ச்சிப் பெருக்கையும அவர் நன்ருக அறிவார். அவர்களது உணர்ச்சிகளை அவர் புரிந்து கொள்கிறார் அவர்களது எண்ணங்களை அவர் சிந்திக்கிறார் அவர்களது ஆசை அபிலாஷைகளை அவர் எதிரொலிக்கிறார்"

-என்றபுகழோவியத்திற்கு பொருத்தமுள்ளவராகத் திகழும் புரட்சித்தலைவர் அவர்கள் அன்று தெரிவித்த கருத்து இன்று தேர்தல் முடிவாக வெளிவந்திருக்கிறது.

நாடாளுமன்றத் தேர்தலுக்கு காரணமாக அமைந்த தன்மைகளும், வாக்காளர்களின் கவனத்தை ஈர்த்த பிரச்சனைகளும் வேறு.

அதனை உணராது தமிழகத்தில் நமது வெற்றிக்கு காரணம் கருணாநிதி தான் என்று சொல்லி, தலைமையமைச்சரை தவறான முடிவெடுக்க தூண்டியவர்களுக்கும் துணை நின்றவர்களுக்கும், நாட்டு மக்கள் நல்ல பாடம் புகட்டியிருக்கிறார்கள்.

'தொடுத்த கணை' 'விர்' ரெனப் பாய்கிறதல்லவா! பாயும் அம்பு! அதனைப் போன்றவர் கருணாநிதி என்று நம்பினார்கள் அவர்கள்.

'குறி தவறிக் கீழே வீழ்ந்து கிடக்கும் அம்பு' போன்ற நிலையினராக அவர் மாறி பல ஆண்டுகள் ஆகிறது என்பதை அவர்கள் அறிவதற்கு நியாயமில்லை.

"ஊழலுக்காக கருணாநிதி 'உள்ளே' போகின்ற காலம் தொலைவில் இல்லை" என்று ஒரு காலத்தில் பேசியவர்கள்.

நாங்கள் 'உள்ளே' என்று சொன்ன சொல்லுக்கு 'கோட்டை' என்று பொருள்' என்று மாற்றி பேசிப் பார்த்தார்கள்.

நாட்டு மக்கள் எதனையும் அவ்வளவு எளிதில் மறந்து விடுவார்கள் என்பது அவர்களது நம்பிக்கை.

அறிவார்ந்த தமிழகத்து மக்கள் சொல்லுக்கு பொருள் இருக்கட்டும். செய்த ஊழலுக்கு தண்டனை எங்கே? என்று கேட்டிருக்கிறார்கள், தேர்தலில் அளித்த தீர்ப்பின் மூலம்.

நாடாளுமன்றத் தேர்தலில் கழகம் பெற தவறிய வெற்றியை காரணமாகச் சொல்லி, அண்ணா வழியில் நடந்த கழக அரசைக் கலைத்தார்கள்.

'ஆட்சியை நீக்கியது அநியாயம்' என்று நாம் சொன்னபோது, "அரசியல் சட்டத்தில் விதி 356 இருக்கும் போது, அதனை பயன்படுத்துவதில் தவறென்ன" என்று ஆணவத்தின் உச்சியில் நின்று பேசினார், கருணாநிதி.

"அங்காடிக்காரியை சங்கீதம் பாடச்சொன்னால் வெங்காயம் கொத்துமல்லி விலையென்னவென்று கேட்பாள்" என்று அண்ணா, ஏடொன்றில் எழுதி இருந்தார்.

கருணாநிதியின் தேர்தல் காலப்பேச்சு, சங்கீதம் பாடத் துடிக்கும் அங்காடிக்காரியை நினைவூட்டுவதாகத்தான் இருந்தது.

'நாடாட்சிக்காகத்தம் பொறுப்பு மக்கள் கரத்தில் இருந்தால் அதை அழிக்க யாராலும் முடியாது'

-என்றார் டேனியல் வெப்ஸ்டர்.

அதனால்தான் எதிரிகளின் ஏளனபேச்சு துரோகிகளின் தூற்றுதல் பற்றி கவலைப்படாது, அதிகார பலத்தால் நீக்கப்பட்ட அண்ணாவின் அரசை தமிழகத்தில் மீண்டும நிறுவிட மக்கள்சக்திக்கு அழைப்பு விடுத்தார், புரட்சித் தலைவர்.

பணபலம், படைபலம், 'ஆட்சியைப் பிடிப்பது உறுதி' என்ற பொய்ப் பிரச்சாரத்தால் உருவான போலிச் செல்வாக்குஆகிய வற்றின் உதவியோடு கருணாநிதி, தேர்தல்களத்தில் வியூகம் வகுத்தார்.

எத்தனையோ வேடங்களைப் போட்டார்.

அண்ணன் ஆர் எம் வீ அவர்கள் ஓரிடத்தில் வேதனையோடு குறிப்பிட்டதைப்போல,

"கூட்டணி மேடையில் இருப்பவர்கள் கோபிப்பார்கள்" என்றஞ்சிநம்மை ஆளாக்கிய அண்ணாவின் பெயரையே உச்சரிக்க மறுத்தார்.

எப்படியும்முதல்வராகிட முடியுமென்று நம்பினார் ஆனால் நல்லதீர்ப்புவழங்கி ஆட்சியை புரட்சித்தலைவரிடம் ஒப்படைத்து இருக்கிறார்கள் தமிழகத்து மக்கள்.

நாடாளுமன்றத் தேர்தலில் கழகம் சந்தித்த தோல்வி, தொடர வேண்டும் என்பது கருணாநிதியின் ஆசை.

வாக்காளர்களின் வலிவான கரங்கள், அவரது தோல்வி படலத்தை தெளிவாக எழுதி இருக்கின்றது.

பாவம், கருணாநிதியின் அரசியல் வாழ்வு ஒருசுவையற்ற சோகக்கதைக்கு சுவையான 'கருப் பொருளை'த் தந்திருக்கிறது.

புரட்சித்தலைவர் நாடாளுமன்றத்தேர்தலில் 'பெறத தவறிய வெற்றி' 'ஆட்சிக் கலைப்பு' என்ற பெயரால் டில்லி ஆட்சியாளர்கள் ஏற்படுத்திய இடையூறு அத்தனையும் இன்றுமக்கள் சக்தியால் மாற்றியமைக்கப்பட்டிருக்கிறது.

"சூரிய ஒளியும், மழைத் தூறலும் ஒரு மாபெரும் இயக்கத்தின் மகத்தான வெற்றியை மாற்றிவிட முடியாது"

-என்றான் இத்தாலிநாட்டு மாஜினி, புரட்சித் தலைவரிடம் ஆட்சியை ஒப்படைத்ததன் மூலம், அதனை நிதர்சன உண்மையாக்கி இருக்கிறார்கள் தமிழகத்து மக்கள்.

புகழின் உச்சியில் உறுதியுடன் தவழும்போது நமது தலைவரை போற்றுவோம்; அவரது புகழ் மகுடத்தில் வைரம பதித்து மகிழும் மக்கள் சக்தியை வாழ்த்துவோம்!

வாழ்க புரட்சித்தலைவர்! வெல்க மக்கள் சக்தி!

## தரணியன்

## அண்ணா தி. மு. க. வினரை தி. மு. க. தாக்கியதால்

## இ. காங்கிரஸ் கூட்டணி தோற்றது

# தோல்விக்கு காரணம் தி.மு.க.வன்முறையே!

## இ. காங்கிரஸ் தி.மு.க. உறவு முறிந்தது: எம். பி. எஸ். அறிவிப்பு

சென்னை, ஜூன் 6- கருணாநிதிக் கட்சியின் வன்முறைப் போக்கும், வெறித்தனமும், கருணாநிதியே முதல்வர் என்று அறிவித்ததும்தான் படுதோல்விக்குக் காரணம் என்று தமிழ்நாடு இந்திரா காங்கிரஸ் தலைவர் எம். பி. சுப்பிரமணியம் கூறினர்.

இப்போது தேர்தல் ஏதும் இல்லை. ஆகையால் கூட்டும் இல்லை என்றும், தமிழ்நாடு சட்டப்பேரவையில் இந்திரா காங்கிரஸ் உறுப்பினர்கள் தனியாக அமர்வார்கள் என்றும் அவர் தெரிவித்தார்.

சட்டப்பேரவைத் தேர்தலுக்காக மட்டும் ஏற்பட்ட இந்தக் கூட்டணியிலிருந்து இந்திரா காங்கிரஸ் விலகுவதில் தவறு ஏதுமில்லை என்று மத்திய தகவல் ஒலிபரப்பு அமைச்சர் சி.எம்.ஸ்டீபன் கூறியுள்ளார்.

### பிரதமர் கருத்து

கருணாநிதியை முதல்வர் என்று அறிவித்ததால் தான் தமிழ்நாட்டில் தோல்வி ஏற்பட்டது என்று பிரதமர் இந்திராவும் குறிப்பிட்டுள்ளார்.

### முறிவு

'இது தேர்தலுக்காக ஏற்பட்ட உறவில்லை; இலட்சிய உறவு' என்று கருணாநிதி கரடியாய்க் கத்தியதெல்லாம் உண்மையில்லை என்று காங்கிரஸ் தலைமையில் உள்ள அனைவரும் கூறிவிட்டனர்.

தேர்தலுக்காக ஏற்பட்ட இ.காங்கிரஸ் திமுக உறவு தமிழ்நாட்டுத் தேர்தல் முடிவுகளைத் தொடர்ந்து முறிந்தது என்று இந்திரா காங்கிரஸ் முக்கியஸ்தர் ஒருவர் தெரிவித்தார்.

தேர்தல் முடிவுகள் இவ்வாறு இருப்பதற்குக் காரணம் தேர்தல் காலத்தில் திமுகவினர் தாங்கள் தான் ஆட்சிக்கு வருவோம் என்ற எண்ணத்தில் ஆடிய கொலை வெறியாட்டமும் பெரும் பாதிப்பை ஏற்படுத்தி விட்டது என்று காங்கிரஸ் தலைமை கருதுகிறது.

தமிழ்நாட்டில் இந்திரா காங்கிரஸ் தி. மு. க. கூட்டணிக்கு ஏற்பட்ட தோல்வி குறித்து பிரதமர் இந்திராவிடம் டெல்லியில் பேச்சுவார்த்தை நடத்தி விட்டு வந்த எம். பி. சுப்ரமணியம் நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் தெரிவித்ததாவது:

"பிரதமர் இந்திராவையும் மத்திய அமைச்சர் ஆர். வெங்கட்ராமனையும், கட்சித் தலைவர்களையும் சந்தித்துப் பேசினேன்.

நான் நடந்து முடிந்த சட்டசபைத் தேர்தல் முடிவுகளைப் பற்றியும்" தற்போதைய அரசியல் நிலவரம் குறித்தும் சொல்வதற்குத்தான் டெல்லிக்குச் சென்றேன்.

கட்சிகளுக்கிடையில் கூட்டு, உறவு என்பது தேர்தலின்போது ஏற்படுவதுதான். இந்திரா காங்கிரஸ் தி.மு.க. கட்சிகளுக்கு இடையில் ஏற்பட்ட உறவும் தேர்தல் உறவுதான். இப்பொழுது தேர்தல் இல்லை- தேர்தல் வரும்போது கூட்டு பற்றி முடிவு செய்யப்படும்.

சட்டசபைத் தேர்தலில் இந்திரா காங்கிரஸ் கூட்டணி பெரும்பான்மையாக வந்தால் தான் கருணாநிதி தலைவராக இருப்பார் என்று இந்திரா காந்தி தெரிவித்தார்.

இப்பொழுது பெரும்பான்மை கிடைக்காததால், இந்திரா காங்கிரஸ் கட்சி உறுப்பினரே எங்கள் கட்சிக்குத் தலைவராக இருப்பார்.

சட்டசபையில் இந்திரா காங்கிரஸ் கட்சி எம். எல். ஏக்கள் தனியாகவே அமருவார்கள்.

### 11-ஆம் தேதி கூட்டம்

இம்மாதம் 11 ஆம் தேதி இந்திராகாங்கிரஸ் சார்பில் புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள சட்டப்பேரவை உறுப்பினர்கள் கூட்டம் சென்னையில் நடைபெறும். இந்தக்கூட்டத்தில் கட்சிக்கான சட்டசபைத்தலைவர் தேர்ந்தெடுக்கப்படுவார்.

### வன்முறை

செங்கற்பட்டு மாவட்டம் மதுராந்தகத்தில் தி.மு.கவைச் சேர்ந்த சிலரின் வன்முறையால் அந்த மாவட்டமே பாதித்து விட்டது.

இவ்வாறு எம் பி சுப்ரமணியம் கூறினர்.

கருணாநிதிதான் முதல்வர் என்று அறிவித்தது தான் தோல்விக்குக் காரணம் என்று பிரதமர் இந்திரா கூறியிருப்பது பற்றி கேட்டதற்கு பதிலளிக்கையில்,

"இந்திராகாந்தி அகில இந்தியகாங்கிரஸ் தலைவர். பலரிடம் கருத்துக்களைக் கேட்டறிந்துதான் அவர் அப்படிக் கூறியிருக்க முடியும். ஆகவே அதுபற்றி தனியாக கருத்து கூறத் தேவையில்லை,, என்றார்.

### கூட்டணி முறிவு

"தமிழ்நாட்டில் திமுகவுடன் இந்திரா காங்கிரஸ் வைத்திருக்கும் கூட்டு முறியாது என்று சொல்ல முடியாது.

சட்டசபைத் தேர்தலுக்காக மட்டும் ஏற்பட்ட இந்தக் கூட்டணியிலிருந்து இந்திரா காங்கிரஸ் விலகுவதில் தவறு ஏதுமில்லை" என்று மத்திய தகவல் ஒலிபரப்பு அமைச்சர் ஸ்டீபன் தக்கலையில் நிருபரிடம் தெரிவித்தார்.

## திருநாவலூர் கழக வேட்பாளர் மனோகரன் வழக்கு

சென்னை, ஜூன். 6 திருநாவலூர் தொகுதியில் போட்டியிட்ட கழக வேட்பாளர் டி. என். ஜி. ஏ. மனோகரன் வழக்குத் தொடர இருக்கிறார்.

திருநாவலூர் தொகுதியில் 172 வாக்கு வித்தியாசத்தில் மனோகரன் தோற்றதாக அறிவிக்கப்பட்டது.

வாக்குகள் சரியாக எண்ணப்படவில்லை. மறு எண்ணிக்கை நடத்த வேண்டும் என்று கேட்டதற்கு மறு எண்ணிக்கைக்கு அனுமதிக்கப்படவில்லை. இது பற்றி புரட்சித் தலைவரை சந்தித்தபோது மனோகரன் எடுத்துக் கூறினார்.

மறு எண்ணிக்கை கோரி மனோகரன் வழக்குத் தொடர இருக்கிறார்.

## மாணவர்கள் புகழாரம்

தஞ்சை, ஜூன் 6- புரட்சித்தலைவர் பெற்ற மகத்தான வெற்றிக்கு தஞ்சைமாவட்டமாணவர் அமைப்பாளர் ஆழி. கோ. மருதையன் வாழ்த்துக்களைத் தெரிவித்துள்ளார்.

தமிழகத்தின் புகழ் குன்றிலிட்ட விளக்காக நின்று ஒளிவிட பொறுப்பேற்றுக்கொண்ட புரட்சித்தலைவருக்கு மாணவர் சமுதாயத்தின் மனமார்ந்த பாராட்டுக்களைத் தெரிவிப்பதாக அவர் குறிப்பிட்டுள்ளார்.

## இணையிலா முதல்வர் வாழ்க!

-: புத்தனேரி சுப்பிரமணியம் :-

மாபெரும் வெற்றி கண்டார்
மக்களின் திலகம்; ஆட்சிக்
கோபுரம் மீது தர்மக்
கொடியினை ஏற்றிவென்றார்,
யாவரும் வியக்க மீண்டும்
அருந்திறல் முதல்வரானார்;
பூவுலகெங்கும் அண்ணா
புகழ்மணம் பரப்பு வாரே!

தேர்தலில் எம். ஜி. ஆரின்
திறமையால் விளைந்த வெற்றி
நேர்மையின் வெற்றி; அண்ணா
நெறிகளின் வெற்றி; அன்புப்
பார்வையால் முறுவ லாலே
பகைமனம் திருந்த வைக்கும்
சீர்மையும் நாட்டுக் கேற்ற
திட்டமும் நிறைவு காண்பார்,

நாலரைக் கோடி மக்கள்
நாயகர்; ஆட்சிக் கப்பல்
மாலுமி எதிர்ப்பைத் தாண்டும்
வல்லமை வெல்லும், எந்தக்
காலமும் அண்ணா காத்த
கடமையும் கட்டுப்பாடும்
சீலமும் பொன் மனத்துச்
செம்மலின் ஆட்சி காக்கும்

எத்தனை இடர்வந் தாலும்
எதற்குமே அஞ்சி டாமல்
சத்தியம் சமத்து வத்தைத்
தன்னுயிர் போலே காக்கும்
உத்தமர் எம் ஜி ஆரின்
உழைப்பிலே மலர்ந்த ஆட்சித்
தத்துவம் ஏழை வாழ்க்கைத்
தரமெலாம் உயர வேண்டும்.

தனிப்பெரும் செல்வாக் கோடு
தமிழக மக்கள் உள்ளம்
இனித்திட ஆட்சிப் பீடம்
ஏறிய எம்.ஜி.ஆரை
இனிஎவர் வெல்லக் கூடும்?
எதிரியைச் சிரிப்பால் வெல்லும்
இனியவர் நல்லாட் சிக்கோர்
இலக்கணம் வகுப்பார் வாழ்க!

## முதல்வர் பதவி பெற இ. காங்கிரசார் கையெழுத்துவேட்டை

புதுடெல்லி, ஜூன் 6- சில மாநிலங்களில் முதல் அமைச்சர் பதவிக்காக இ. காங்கிரசார் இப்போது கையெழுத்து வேட்டையில் இறங்கியுள்ளனர்.

இந்தியாவில் தற்போது நடந்துமுடிந்த சட்டசபை தேர்தல்களில் 7 மாநிலங்களில் இ. காங்கிரஸ் பெரும்பான்மையான இடங்களை கைப்பற்றியுள்ளது.

தமிழ்நாட்டில் நடந்த சட்டசபை தேர்தலில் அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகத்திற்கு முழு மெஜாரிட்டி கிடைத்துள்ளது. தமிழக முதல் அமைச்சராக புரட்சித் தலைவர் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார். அவர் இம்மாதம் 9 ந்தேதி முதல் அமைச்சராகப் பதவி ஏற்கிறார்.

ஆனல் மற்ற 7 மாநிலங்களில் இ. காங்கிரஸ்கட்சி வெற்றி பெற்றபோதிலும் யார் முதல் அமைச்சராக வருவது என்று போட்டி இப்போது துவங்கியுள்ளது, அவர்களுக்குள் ளேயே நான் தான் முதல் அமைச்சர் என்று அறிவித்து வருகின்றனர். இதற்கிடையில் இப்போது இ.காங்கிரசார் கையெழுத்து வேட்டையில் இறங்கியுள்ளனர். அதில் சிலர் முதல் அமைச்சராகவர வேண்டும் என்பதற்காக இம்மாதிரி கையெழுத்து வேட்டையில் இறங்கியுள்ளனர்.

இந்த நடவடிக்கைபிரதமருக்குபிடிக்கவில்லை என்று அக்கட்சி பொதுச்செயலாளர் பூட்டாசிங் தெரிவித்தார்.

இதுகுறித்து அவர் கூறியுள்ளதாவது:

தற்போது சில மாநிலங்களில் முதல் அமைச்சர் பதவிக்காக சிலர் தங்களுக்கு ஆதரவாக கையெழுத்து வேட்டை நடத்தி வருகின்றனர். இந்தவிஷயத்தை பிரதமர் இந்திராகாந்தி ஆதரிக்கவில்லை.

மேலும் இவ்விஷயத்தில் இவ்வாறு காங்கிரசார் நடந்துகொள்வது பிரதமருக்கு பிடிக்கவில்லைஎன்றும் அவர் கூறியுள்ளார்.

## பேச்சாளர் முகவரி

எஸ். புரட்சிமணி
1- மேற்கு மாடவீதி
நுங்கம் பாக்கம்
சென்னை-34



மக்கள்கோரிக்கையைஏற்று

சீரமைப்பு பணிக்காக

## கபாலி எம். எல். ஏ ஒருமாத சம்பளத்தை அளிக்கிறார்

சென்னை, ஜூன், 6- அடையாறு தாமோதர புரத்தில் உள்ள திருவீதியம்மன் ஆலயத்தை சீரமைக்கதனதுமுதல்மாத சம்பளத்தை அளிப்பதாக டி கே கபாலி எம்.எல்.ஏ. கூறினார்

மயிலைத் தொகுதி கழக வெற்றி வீரர் டி. கே. கபாலி நேற்று137-வதுவட்டத்திலுள்ள மக்களுக்கு நன்றிதெரிவிக்க சென்றார்.

வட்டத்தின் பல பகுதிகளுக்கும் வீடு வீடாகச் சென்று மக்களுக்கு நன்றி கூறினர்.

தாமோதரபுரம் பகுதி மக்கள் சார்பில் கபாலிக்கு சிறப்பாக வரவேற்பு கொடுக்கப்பட்டது.

தாய்மார்கள் ஆரத்தி எடுத்து வரவேற்றனர் பொதுமக்கள் மாலை அணிவித்து வரவேற்றனர்,

தங்கள் பகுதிக்கு சாலை வசதி, குடிநீர் வசதி ஆகியவற்றை செய்துதரவேண்டும்என்றும் அந்தப்பகுதி மக்கள் முறையிட்டனர். உடனடியாக தக்க நடவடிக்கை எடுப்பதாக கபாலி கூறினர்.

அங்கே திருவீதியம்மன் என்ற ஆலயம்ஒன்று இருக்கிறது மிகவும் பழுதான அந்த ஆலயத்தை சீர்படுத்த உதவுமாறு மக்கள் கபாலியிடம் கோரினர்.

ஆலய சீரமைப்புப் பணிக்கு தனது முதல்மாத சம்பளத்தை அளிப்பதாக கபாலி எம் எல் ஏ உறுதி கூறினர்.

தொகுதி அமைப்பாளர் மயிலை வே தமிழ்மணி, மந்தைவெளி நடராசன் ராதாபாய், இரா.மூர்த்தி ஆ கோ கோபால் ஆகியோர் கபாலி எம் எல் ஏ யுடன் சென்றனர்.

## ஆந்திராவில் கொடியேற்றம்

ஆந்திர மாநிலம் குப்பம் வட்டம் மல்பானூரில் கழகத்தின் சார்பில் 7-6-80- காலை 10 மணிக்கு ஏ எம் கோபால் முன்னிலையில் ஊராட்சி ஒன்றியத் தலைவர் நரசிம்ம நாயுடு கொடியேற்றிவைப்பார்.

## குமரிஅனந்தன் கட்சி எம்.எல்.ஏ.க்கள் கூட்டம்

சென்னை, ஜூன் 6- காந்தி - காமராஜ் தேசிய காங்கிரஸ் கட்சியின் புதிய எம். எல்.ஏ.க்கள் கூட்டம் வருகிற 8-ந்தேதி காலை 10-மணிக்கு சென்னையில் கூடுகிறது.

கட்சியின் தலைவர் குமரி அனந்தன் தலைமையில் சென்னை தியாகராயநகரில் உள்ள காமராஜ் பவனில் இக்கூட்டம் நடைபெறுகிறது.

மேகாலயா மாநிலத்தில்

## மாணவிகள் மீது தடியடி: 23பேர் படுகாயமடைந்தனர்

ஷில்லங். ஜூன் 6- மேகாலயா மாநிலத்தில் கிளர்ச்சி நடத்திய மாணவிகள் மீது நடந்த தடியடியில் 23 பெண்கள் படுகாயமடைந்தனர் இதில் 8 பேர் நிலை கவலைக்கிடமாக உள்ளது

அஸ்ஸாம்மாநிலத்தைப் போலவே மேகாலயா மாநிலத்திலும் ":வெளிநாட்டவர்களை, வெளியேற்றக் கோரி கிளர்ச்சி நடந்து வருகிறது.

ஷில்லாங்நகரில், மாணவிகள் கிளர்ச்சியில் ஈடுபட்டு, ஊர்வலம் நடத்தினார்கள்.

அப்போது மத்திய போலீசார் நடத்திய தடியடியில் 23 மாணவிகள் படுகாயமடைந்தனர். காயமடைந்த மாணவிகள் அனைவரும் ஷில்லாங் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டனர் இதில் எட்டு மாணவிகள் உடல் நிலை கவலைக்கிடமாக உள்ளது.

ஷில்லாங் நகரில் கல்வி நிலையங்கள் அனைத்தும் கிளர்ச்சியை யொட்டி மூடப்பட்டிருந்தது.

சிகிச்சை பெற்று வரும் மாணவிகளை போலீசார் கைது செய்ய வந்துள்ளதாகவும் ஆனல் அதை டாக்டர்கள் அனுமதிக்கவில்லை என்றும் ஆஸ்பத்திரியில் தெரிவிக்கப்பட்டது.

## வெளிநாடுகளில் இந்தியன் ஓவர்சீஸ் பாங்க் சாதனை

சென்னை, ஜூன் 6- இந்தியன் ஓவர்சீஸ் பாங்க் வெளிநாடுகளில் நல்ல முறையில் செயல்பட்டு வருவதாகவும் குறிப்பாக ஹாங்காங்கில் சிறப்பாக உள்ளதாகவும் இந்தியன் ஓவர்சீஸ் பாங்கின் தலைவரும், நிர்வாக இயக்குநருமான கே. விஷ்ணுமூர்த்தி யேர்கடித்தாயார் தெரிவித்தார்.

ஹாங்காங்கில் 25 ஆண்டுகளாக ஐ.ஓ.பி. செயல்படுகிறது. மேலும் பல வெளிநாட்டுக் கிளைகள் திறக்க ஏற்பாடு நடக்கிறது. தென் கிழக்கு ஆசியாவில் 11கிளைகள் உள்ளன.

கடந்த 10 ஆண்டுகளில் இந்த பாங்கின் அன்னிய செலவாணி புழக்கம் 40 மடங்கு அதிகரித்துள்ளது என்றும் விஷ்ணுமூர்த்தி கூறினர். இந்த பாங்கியின் டிபாசிட் மற்ற கணக்குகளின் தொகை (வெளிநாடு கிளைகள் உட்பட) ரூ. 1,153 கோடி. இது 1978ஐ விட 27 சதவீதம் அதிகம், கிராமப்புற தொழில் திட்டத்தின் கீழ் இந்தபாங்க் 15 ஆயிரம் பேருக்கு ரூ 4 2 கோடி கடன் கொடுத்துள்ளது என்றும் அவர் கூறினர்.

தலைமை கழக அறிக்கை எண் 72 80

## கழக உறுப்பினர் சேர்த்தல் 31-7-80 வரை நீடிக்கப்படுகிறது

கழக உறுப்பினர்களை புதுப்பித்தல், புதிய உறுப்பினர்களை சேர்த்தல் ஆகிய பணிகள் 31-7 80 வரை நீடிக்கப்படுகிறது. ஆங்காங்குள்ள கிளைக்கழக அமைப்பாளர்களும் உட்கிளை அமைப்பாளர்களும் தேவையான உறுப்பினர் சேர்க்கும் விண்ணப்பங்களைத் தலைமைக் கழகத்திலிருந்து பெற்றுக்கொள்ளலாம்.

கிளைக்கழகங்கள் அமையாத ஊர்களில் தற்காலிக அமைப்பாளர்களைத்தேர்ந்தெடுத்து அவர் மூலமாக உறுப்பினர் விண்ணப்பத் தாள்களைப் பெற்று உறுப்பினர் சேர்க்கும் பணிகளை விரைவாக முடிக்கலாம்.

முன்பே தலைமை நிலையத்திலிருந்து உறுப்பினர் தாள் பெற்றுக்கொண்டவர்கள் உடனடியாக சேர்க்கப்பட்ட உறுப்பினர் தாள்களையும் அவற்றுக்கு உரிய தொகையையும் தலைமை நிலையத்திற்கு அனுப்பிவைக்கவும், ஏற்கெனவே அனுப்பி வைக்கப்பட்ட உறுப்பினர் சீட்டுகள் தொடர்ந்து தலைமை நிலையத்தால் உரியவர்களுக்கு அனுப்பி வைக்கப்படுகின்றன. அவற்றைக் கழக அமைப்பாளர்கள் பெற்று உறுப்பினர்களுக்கு தவறாமல் கொடுக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்.

**31-7 80 நாளுக்குள் உறுப்பினர்களாக சேர்பவர்கள் மட்டுமே கழக அமைப்பாளர்களுக்கான தேர்தலில் பங்குபெற உரிமை படைத்தவர்கள் ஆவார்கள்.**

எனவே உறுப்பினர் சேர்க்கும் பணியைத் துரிதப்படுத்தி நிறைவு செய்யுமாறு ஆங்காங்குள்ள கிளைக்கழக அமைப்பாளர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

இனி உறுப்பினர் சேர்ப்பதற்கான காலம் 31-7 80க்கு பிறகு நீடிக்கப்படமாட்டாது என்பதை இதன்மூலம் திட்டவட்டமாக தெரிவித்துக்கொள்கிறேன்.

இரா. நெடுஞ்செழியன்
பொதுச்செயலாளர்,
அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்

சென்னை-14
5 6-80

## காயிதே மில்லத்தின் மகன்: கே. ஏ. கே. க்கு வாழ்த்து

சென்னை. ஜூன். 6- காயித்தே மில்லத் பிறந்த நாளான நேற்று அவரது மகன் மியாகான் எம்.எல்சி இல்லத்துக்குச் சென்றார். கே. ஏ. கே. மியாகான் குடும்பத்தினர் கே.ஏ. கேயை வரவேற்றனர்.

ஆயிரம்விளக்குதொகுதியில் கே. ஏ. கே. வெற்றி பெற்றதைத் தொடர்ந்து அவருக்கு காயிதே மில்லத் அவர்களின் மகன் மியாகான் எம். எல். சி. நேற்று வாழ்த்துக் தந்தி அனுப்பி இருந்தார்.

காயிதே மில்லத் பிறந்த நாளான நேற்று மியாகான் இல்லத்துக்கு கே.ஏ.கே. தமது துணைவியாருடன் சென்றார். கே.ஏ.கே.க்கு மியாகான் மாலைஅணிவித்து வாழ்த்துத் தெரிவித்தார் அவரது குடும்பத்தினரும் வாழ்த்துத் தெரிவித்தார்கள். மியாகானுக்கு கே. ஏ. கே. மாலை அணிவித்தார்.

அந்தப் பகுதியிலுள்ள மற்ற முஸ்லிம் பெரியவர்களும் வந்து கே ஏ கேயை பாராட்டினர்.

Published by K.Ravindran on be half of Thangamani Publications 275, Avvai Shanmugam Salai,- Madras-14 and Printed by him at Print House, 1. First Main Road, United India Colony Madras-24. Editor: E. PARASURAMAN

**சந்தா விவரம்**

1 வருடச் சந்தா தொகை ரூ. 130
6 மாதச் சந்தா தொகை ரூ. 65
3 மாதச் சந்தா தொகை ரூ. 32-50

3 மாதத்திற்குக் குறைவான சந்தாத் தொகை ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது

நிர்வாகி :
"அண்ணு"
275, அவ்வை சண்முகம் சாலை, சென்னை-600 014.


# அண்ணு



## நன்றி அறிவிப்பு




நடைபெற்ற சட்டமன்றத் தேர்தலில் மகத்தான வெற்றிபெற்ற புரட்சித்தலைவர், பொன்மனச் செம்மல், எங்கள் இதயதெய்வம், மதுரையை மீட்ட சுந்தரபாண்டியன், நாலரைக்கோடி மக்களின் நாயகன், அண்ணாவின் அன்புத்தம்பி, புரட்சித்தலைவர் மாண்புமிகு எம் ஜி ஆர் அவர்கள் தலைமை ஏற்று நாலரைக்கோடி மக்களுக்கும் நல்வாழ்வு தேடித் தருவார் என்று நம்பிக்கையுடன் அவர்களுக்கு எங்கள் மனமார்ந்த நன்றியையும் வணக்கத்தையும் தெரியப்படுத்திக்கொள்கிறோம்.

இங்ஙனம்

**P மணி**
பொருளாளர்

**வடிவேல்**
உறுப்பினர்

**T. M. செல்லமுத்து**
அனைத்திந்திய அண்ணு தி மு கழக கிளை அமைப்பாளர்

தென்னங்கரைபாளையம்
முத்தூர் P. O.
638 105

---

வாழ்க அண்ணு நாமம்! புரட்சித்தலைவர் பணி வெல்க




## நன்றி அறிவிப்பு

நடைபெற்ற சட்டமன்றத் தேர்தலில் மாபெரும் வெற்றி பெற்ற அனைத்திந்திய அண்ணு தி மு கழக தலைமையிலான மந்திரிசபை மீண்டும் தமிழக மக்களுக்கு நல்லது செய்ய மாண்புமிகு புரட்சித் தலைவர் அவர்களுக்கும், எங்கள்தொகுதி திரு K G K கிருஷ்ணசாமி M L A அவர்களுக்கும் எங்களது மனமார்ந்த நன்றியை அன்பு காணிக்கையாக்குகிறோம்.

இங்ஙனம்

**வெங்கடேசா மளிகை ஸ்டோர்**
திருப்பூர் ரோடு, காங்கயம்

எங்களிடம் எப்பொழுதும் குறைந்த வாடகையில் மோட்டார் வான்கள் கிடைக்கும்.

**பழனிசாமி C. தம்பி & பிரதர்ஸ்**
**C. குழந்தைசாமி**
காங்கயம்
பெரியார் மாவட்டம்

---

## காஞ்சி தொகுதி வாக்காள பெருமக்களுக்கு நன்றி



அன்புடையீர்! வணக்கம்
நடைபெற்ற சட்டமன்றத் தேர்தலில்
இதய தெய்வம்
மாண்புமிகு
தமிழக முதல்வர்
புரட்சித்தலைவர் அவர்களின்
இரட்டை இலைச் சின்னத்தில்

வாக்களித்து என்னை வெற்றி பெறச் செய்த அனைத்து வாக்காளப் பெருமக்களுக்கும், ஓயாது உழைத்த கழகத் தோழர்களுக்கும், தோழமைக் கட்சியினருக்கும் எனது மனமார்ந்த நன்றியினை இருகரம் கூப்பி தெரிவித்துக் கொள்கிறேன்.



**P. வெங்கட சுப்பிரமணியன்**
M.A., B.L.
சட்டப்பேரவை உறுப்பினர்
காஞ்சிபுரம் தொகுதி

---

# புரட்சித்தலைவருக்கு கல்வித்துறை அலுவலகப் பணியாளர் வாழ்த்து

சென்னை, ஜூன் 6-தமிழகமுதல்வராக பதவி ஏற்கும் புரட்சித்தலைவரை தமிழ் நாடு கல்வித்துறை பிரிவு அலுவலகப் பணியாளர் சங்கம் வாழ்த்தி செய்தி அனுப்பியுள்ளது.

புரட்சித்தலைவரின் ஆட்சியில்தான் தமிழகத்தின் கல்வித்துறை பொற்காலமாக இருந்தது. மீண்டும் அந்த பொற்காலம் நீடிக்க புரட்சித்தலைவர் முதல்வராக வேண்டும் என்ற எண்ணம் நிறைவேறியிருக்கிறது என்றும் அந்த செய்தியில் கூறியிருக்கின்றனர்.

புரட்சித்தலைவர் அவர்கள் தமிழக முதல்வராக பதவி ஏற்க இருப்பதால், கல்வித்துறைக்கு மீண்டும் ஒரு பொற்காலம் பிறக்க இருக்கிறது என்று கல்வித்துறை அலுவலகப் பணியாளர் சங்கத்தின் மாநிலத் துணைத் தலைவர் சீ. நீலகண்டன் செங்கல்பட்டு மாவட்ட அலுவலகப் பணியாளர் சங்கத் தலைவர் தே. எத்திராஜன், சி. டி. பிரிவு அரசு அலுவலர் கழகம் சைதாப்பேட்டை கிளைத் தலைவர் பாலவரதன் ஆகியோர் புரட்சித்தலைவருக்கு வாழ்த்துக்களையும் மகிழ்ச்சியையும் தெரிவித்துள்ளனர்.



கருநாடக மாநில

## திராவிடர் கழகம் வாழ்த்து

சென்னை, ஜூன் 6- தமிழக சட்டமன்ற தேர்தலில் மகத்தான வெற்றிவாகை சூடியிருக்கும் அனைத்திந்திய அண்ணு தி மு கழகத்திற்கும் புரட்சித்தலைவருக்கும் கருநாடக மாநில திராவிடர் கழகத்தின் சார்பில் தலைவர் சி. ஆர். விசாலக்குமி சிவலிங்கம் பாராட்டுதலையும் மகிழ்ச்சியையும் தெரிவித்துள்ளார்.

புரட்சித்தலைவரின் தலைமையில் அமைக்கப்படும் அரசு, தந்தை பெரியார் அவர்களின் லட்சிய வழி நின்று சாதனைகளை செய்ய வாழ்த்தியுள்ளார்.

---

## விமானவிபத்தில் மாண்டால் ரூ. 2 லட்சம்

புதுடெல்லி, ஜூன் 6- விமானத்தில் செல்லும் பயணிகள் விபத்துக்குள்ளாகி அதில் உயிரிழப்பவர்களுக்கு அளிக்கப்படும் நஷ்ட ஈடு ரூ 2 லட்சமாக உயர்த்தப்பட அரசு முடிவு செய்துள்ளது.

இப்போது ரூ 1 லட்சம் நஷ்ட ஈடு வழங்கப்படுகிறது. இதுகுறித்து இரண்டொரு நாட்களில் அறிவிப்பு வெளியிடப்படும் என்று தெரிகிறது.

விமான விபத்தில் சிக்கி அதனால் நிரந்தரமாக உடல் ஊனம் ஏற்பட்டாலும் ரூபாய் 2லட்சம் நஷ்டஈடு வழங்கப்படும்.

12வயதுக்குக் குறைந்த குழந்தைகள் உயிரிழந்தாலோ நிரந்தர ஊமை அடைந்தாலோ, ரூ. 50 ஆயிரம் நஷ்டஈடு வழங்கப்பட்டு வந்தது இது ஒருலட்சம் ரூபாயாக உயர்த்தப்படும்.

தற்காலிக ஊனம் ஏற்பட்டால் குணமாகும்வரை நாள்தோறும் ரூ. 200 வீதம் அல்லது மொத்தமாக 40 ஆயிரம் வழங்கப்படும்.

# புரட்சித் தலைவருக்கு அரசு அலுவலர் சங்க தலைவர்கள் பாராட்டு

சென்னை, ஜூன் 6- நாடு முழுதுமுள்ள அரசு அலுவலர்களின் பல்வேறு சங்கங்களின் தலைவர்கள் புரட்சித் தலைவருக்கு பாராட்டும் வாழ்த்தும் தெரிவித்துள்ளனர்.

தமிழக மக்களின் நல்வாழ்விலும் அரசு ஊழியர்களின் நலன்களிலும் அக்கறைகொண்டுள்ள புரட்சித்தலைவர் அவர்களுக்கும் அவருடைய தலைமையின் கீழ் அமையவிருக்கும் அமைச்சரவைக்கும் தமிழ்நாடு நில அளவை வரைவாளர் கழகத்தின் சார்பில் இதயங்கனிந்த பாராட்டுகளை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறோம் என்று பொதுச் செயலாளர் ந. வேலு குறிப்பிட்டுள்ளார்.

கருவூலம் மற்றும் கணக்குத்துறை அலுவலர்கள் சங்கம் புரட்சித் தலைவரின் தலைமையில் அமையும் அமைச்சரவைக்கு நல்வாழ்த்துக்களையும் ஒத்துழைப்பையும் தெரிவித்து சங்கதலைவி திருமதி இந்திரா மற்றும் சங்க அலுவலர்கள் செய்தி அனுப்பியுள்ளனர்.

தமிழகத்தில் மீண்டும் புரட்சித்தலைவரின் ஆட்சி அமைந்ததற்கு புரட்சித் தலைவருக்கு பாராட்டுத் தெரிவித்தும், மக்களுக்கு நன்றி தெரிவித்தும் தமிழ்நாடு நுகர்பொருள்வாணிபக்கழக தொழிலாளர் சங்க பொதுச்செயலாளர் அ. கு. ஏழுமலை செய்தி அனுப்பியுள்ளார்.

### தொழிற்சங்க காங்கிரஸ்

தமிழ்நாடு தேசிய தொழிற்சங்க காங்கிரசின் சார்பாக அதன் பொதுச் செயலாளர் கே. எஸ். நாராயணன் புரட்சித் தலைவர் வெற்றி பெற்றமைக்காகவும் சட்டமன்ற தலைவராக தேர்ந்தெடுக்கபட்டமைக்காகவும் வாழ்த்து தந்தி அனுப்பியுள்ளார்.

கடந்த இரண்டரை ஆண்டு காலமாக புரட்சித் தலைவரின் ஆட்சிக்காலத்தில் அரசுக்கு எதிரான போராட்டங்களில் ஈடுபடாமல் ஆதரித்து வந்துள்ளதோடு அலுவலகப் பணியை திறமையாகச் செய்து தமிழகம் வேளாண்மைத்துறையில் தலை நிமிர்ந்து நிற்க வகை செய்தது.

மீண்டும் இத்தமிழகத்தில் புரட்சித்தலைவரின் புனித ஆட்சி மக்களால் நிறுவப்பட்டது குறித்து மகிழ்ச்சி அடைகிறோம் என்று தமிழ்நாடு வேளாண்மைத் துறை அமைச்சுப் பணியாளர் சங்கம்(சி மற்றும் டி. பிரிவு) திருச்சி. மாவட்ட செயலாளர் தி. ச. முருகன் கூறியுள்ளார்.

### ஊரக வளர்ச்சித்துறை

புரட்சித்தலைவர் தலைமையில் நல்லாட்சி மலரத் தீர்ப்பு வழங்கிய மக்களுக்கு இக் கழகம் நன்றி செலுத்துகிறது.

அனைத்து ஊரகவளர்ச்சி அமைச்சுப் பணியாளர்களும் அரசுதிட்டம்திட்டங்களை ஒழுக்கத்துடன் விரைவில் நிறைவேற்ற உறுதி கொண்டுள்ளார்கள் என தமிழ்நாடு ஊரக வளர்ச்சித் துறை அமைச்சுப்பணியாளர் கழக தலைவர் ஆ பரமசிவம் கூறியுள்ளார்.

தமிழக மக்கள் புரட்சித் தலைவர் எம். ஜி. ஆர். மீதும் அனைத்திந்திய அண்ணு தி. மு. க. மீதும் நம்பிக்கைவைத்துள்ளனர் என்பதை மீண்டும் இத் தேர்தல் நிரூபித்துக்காட்டியுள்ளது. புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர். தலைமையில் அமையும் அரசுக்கு தமிழக அரசு மருந்தாளுநர்கள் சங்கம் பாராட்டுக்களையும் ஆதரவையும் சங்கத் தலைவர் டி. சக்கரவர்த்தி தெரிவித்துள்ளார்.

தமிழ்நாடு அரசு கல்லூரி ஆசிரியர் கழகத்தின் சார்பிலும் நந்தனம் கலைக்கல்லூரியின் சார்பிலும் அதன் தலைவர் பேராசிரியர் க. பஞ்சாட்சரம் புரட்சித்தலைவரை சந்தித்துமாலை அணிவித்து பாராட்டினர்.

தமிழக மக்களின் ஏகோபித்த ஆதரவு பெற்று ஆட்சிக் கட்டில் ஏற உள்ள புரட்சித் தலைவரைப் பாராட்டி தமிழ்நாடு ஊராட்சி ஒன்றிய பட்டதாரி ஆசிரியர் சங்கத்தலைவர் து. ப. ரகுபதி வாழ்த்து தெரிவித்துள்ளார்.

முன்பு ஆட்சிக்காலத்தில் எங்களுக்குக் காட்டிய ஆதரவைத் தொடர்ந்து வழங்கக் கோரியும் புதிய திட்டங்களுக்கு ஆசிரியர் சமுதாயம் என்றும் ஆதரவு வழங்கும் என்றும் கூறியுள்ளார்.

நடைபெற்ற சட்டமன்றத் தேர்தலில் தமிழக மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு ஆட்சி கட்டிலில் மீண்டும் முதலமைச்சராக

(3-ம் பக்தி பார்க்க)

(8-ம் பக்தி தொடர்ச்சி)

அமரவிருக்கும் தங்களுக்கும் தங்கள் சகாக்களுக்கும் நகர் ஊரமைப்புத் துறை அமைச்சுப் பணியாளர் சங்கம் தனது மகிழ்ச்சியையும் அன்பான பாராட்டுக்களையும் தெரிவிக்கிறது என்று சங்கத் தலைவர் எம். எத்திராஜ் கூறியுள்ளார்.

புரட்சித் தலைவர் அரசுக்கு எங்களின் இதயம் கனிந்த நல்வாழ்த்துக்கள், நல்லாட்சிக்கு உறுதுணையாக தமிழ்நாடு அரசு பொதுப்பணித் துறை அனைத்து அலுவலர்தேசிய சங்கம் என்றும் ஒத்துழைக்கும் என கொள்கை பரப்புச் செயலாளர் ஜோசப் ஜி.எஸ். மணி கூறியுள்ளார்.

நடந்துமுடிந்த சட்டமன்ற தேர்தலில்மக்களின் பேராதரவு பெற்று ஆட்சி அமைக்க உள்ள புரட்சித் தலைவருக்கு தமிழ்நாடு அரசு அனைத்துத்துறை அலுவலர் தேசிய சங்கம் அன்பு வாழ்த்துக்களை தெரிவித்துக் கொள்கிறது. என்று மாநில பொதுச் செயலாளர் ஏ. ஜி. நரசிம்மன் கூறியுள்ளார்.

தேர்தலில் மாபெரும் வெற்றிபெற்றதைப் பாராட்டி புரட்சித்தலைவருக்குத் தலைமைச்செயலக தற்காலிக இளநிலை உதவியாளர்கள் சார்பாக மாலை அணிவிக்கப்பட்டது.

ஜனநாயகவிரோத சக்திகளுக்கு சரியான பாடம் புகட்டிய தமிழகமக்களை பாராட்டுகிறேன் என்று உழைப்பாளர் பொதுநலக் கட்சி தலைவர் உ. கா. ராமமூர்த்தி கூறியுள்ளார்.

மாபெரும் வெற்றி பெற்ற எம். ஜி. ஆருக்கு பாராட்டுகளைத் தெரிவித்துக் கொள்கிறேன் என்றும் அவர் கூறியுள்ளார்.

# முரசொலியே-உனது மறு பெயர் மோசடியா?

முடவன் கொம்புத் தேனை எடுப்பதுபோல கனவு கண்டு அற்ப சந்தோஷம் அடைந்தாலும்; அதைப் போல, தேர்தலில் தி.மு.க. இ. காங்கிரஸ் கூட்டணி படுதோல்வி அடைந்த பிறகு 'முரசொலி' தேர்தலில் தோற்ற தி. மு. க. இ. காங்கிரஸ் வேட்பாளர்களை வெற்றி பெற்றவர்களாக மோசடியாக போட்டு அற்ப சந்தோஷம் அடைந்து வருகிறது.

கடந்த 2ந் தேதிய முரசொலியில் திண்டுக்கல் தொகுதியில் என். வரதராசன், இ. காங்கிரஸ் சார்பில் நின்று வெற்றி பெற்றதாக வெளியிடப்பட்டிருந்தது.

வெற்றி பெற்ற வரதராசன் கழககூட்டணியைச் சேர்ந்த மார்க்சிஸ்ட் கட்சி வேட்பாளர் ஆவார்.

இன்றைய (6ந்தேதி) முரசொலியில் இன்னும் ஒரு படி மேலே போய், வெற்றி பெற்ற தி.மு க. வேட்பாளர்கள் என சிலரின் படங்களைப் பிரசுரித்துள்ளனர். அதில் உடுமலை தொகுதியில் வெற்றி பெற்றவர் என ஆர். டி. மாரியப்பனின் புகைப்படம் பிரசுரிக்கப்பட்டுள்ளது.

உடுமலைத்தொகுதியில் கழக முன்னாள் அமைச்சர் குழந்தைவேலு 50 ஆயிரத்திற்குமேல் வாக்குகள் பெற்று வெற்றி பெற்றவர் ஆவார்.

தேர்தலுக்கு முன்பும் இப்படி பொய்யையும், கட்டுக்கதைகளையும் வெளியிட்டு வந்த முரசொலி, வாக்காளர்கள் தந்த மரண அடிக்கு பிறகும் தொடர்ந்து இப்படிப்பட்ட கேவலமான மோசடிகளில் ஈடுபட்டு வருவதை நாட்டு மக்கள் கவனித்துக் கொண்டுதான் உள்ளார்கள்.

---

## தேவை

தமிழ் தினசரி கணக்கு பேரேடு ஐந்தொகை போடக்கூடிய, ஆங்கிலம் தெரிந்த அக்கவுண்டன்ட் (கணக்கர்) தேவை. 40 வயதுக்கு மேற்படாதவர்கள் முழு விபரத்துடன் விண்ணப்பிக்கவும்,

**C/o. BOX No. 3.**
**"ANNA"**
**MADRAS - 14**

---

## தமிழ்நாடு அரசு

தொழில் நுட்பக் கல்வித்துறை,
சென்னை-600 025

## சிட் டெண்டர் அறிவிப்பு

Letter No D6/13747 79 தேதி 23-5-80

கீழ்க்கண்ட வேலைகளை செய்வதற்கான முத்திரையிட்ட டெண்டர்கள் தனித்தனி உறைகளில் தொழில் நுட்பக் கல்வித்துறையில், பிரிவு III மற்றும் அதற்கு மேற்பட்ட பிரிவுகளில் பதிவுபெற்ற காண்ட்ராக்டர்களிடமிருந்து, சூப்பரின்டெண்டிங் எஞ்சினியர், தொழில் நுட்பக் கல்வித்துறை 'A' பிளாக் எஞ்சினியரிங் கல்லூரி காம்பஸ், கிண்டி, சென்னை-600025 அவர்களால் தமிழ்நாடு ஆளுநருக்காகவும் அவரது சார்பிலும் 18-6-80 மாலை 3 மணிவரையில் ஏற்றுக்கொள்ளப்படும். டெண்டர்கள் அன்றேமாலை 3-15 மணிக்கு அச்சமயம் வருகைதந்துள்ள டெண்டர்தாரர்கள் முன்பாக பிரிக்கப்படும்,

டெண்டர் பத்திரங்களின் விலையை (எக்காரணம் கொண்டும் திருப்பியளிக்கப்படமாட்டாது) அரசு கருவூலக்கில் "077 Education - G - General Account 04- Other Receipts (DP-Code No. 077G ACAA 0407)" என்ற தலைப்பிலும், விற்பனை வரியை, "040 Sales Tax 05 Other Receipts (i) General Sales Tax (D.P-Code No.040A ABAA 0518) என்ற தலைப்பிலும் ஒவ்வொரு வேலைக்கும் தனித்தனி செலான் மூலம் கட்ட வேண்டும். மேற்கண்டபடி செலான்களை உரிய காலத்தில் தாக்கல் செய்தால்தான் டெண்டர் ஷெட்யூல் வழங்கப்படும். தபால் மூலம் அனுப்பும்போது தாமதம் அல்லது இழப்பு ஏற்பட்டால் அதற்கு இத்துறை பொறுப்பல்ல.

| வரிசை எண் | வேலையின் பெயர் | டெண்டர் தொகை ரூ. | ஒப்பந்த வகை | டெண்டர்கள் கிடைக்க இறுதி தேதி |
| --- | --- | --- | --- | --- |
| 1. | சென்னை, தங்கசாலை டாக்டர்விஜயராகவலு ரோடில் கிளை நூலகக் கட்டிடம் கட்டுவது. | 2400- | LS | 18-6-80 மாலை 3 மணிவரை |
| 2. | சென்னை, வேளச்சேரி, ஐந்துஃபர்லாங்ரோடில் கிளை நூலக கட்டிடம் கட்டுவது. | 2400- | LS | 18-6-80 மாலை 3 மணிவரை |

டெண்டர் பத்திரங்கள் இரண்டு வேலைகளுக்கும் 9-6-80 முதல் 17-6-80 வரை விற்பனைக்குக் கிடைக்கும். டெண்டர் ஷெட்யூல் விலை ஒவ்வொரு வேலைக்கும் ரூ. 35-மற்றும் வி. வரி ரூ. 1-75.

**S. விசுவநாதன்**
சூப்பரின்டெண்டிங் எஞ்சினியர்,
பொ. ப. து. தொழில்நுட்பக் கல்வித்துறை,
சென்னை-600 025

DIPR/16002/80-41

---

## நன்றி அறிவிப்பு




நடைபெற்ற சட்டமன்றத் தேர்தலில், அனைத்திந்திய அண்ணு திராவிட முன்னேற்றக் கழக வேட்பாளராக நாமக்கல் தொகுதியில் போட்டியிட்டு பெருவாரியான வாக்குகள் வித்தியாசத்தில் என்னைத் தேர்ந்தெடுத்த வாக்காளப் பெருமக்களுக்கும், கழகத்தோழர்களுக்கும் கழக அணித் தோழர்களுக்கும், குறிப்பாக தாய்க்குலத்தினருக்கும் எனது உளம் கனிந்த நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்வதுடன்,

**புரட்சித்தலைவர் வழிநின்று**
**தொகுதி மக்களுக்காக அயராது பாடுபடுவேன்**
என்பதை பணிவன்போடு தெரிவித்துக் கொள்கின்றேன்.



**இரா. அருணசலம்**
நாமக்கல் தொகுதி
சட்டமன்ற உறுப்பினர்